உ





திருச்சிற்றம்பலம்.

# திருவருட்பாத் திரட்டும் உபதேச — மொழித் திரட்டும் —










கரவையம்பதி வாசரும் உத்தம சைவ வேளாண்குலத்
திகரும் ஆகிய காலஞ்சென்ற ஸ்ரீமாந்
வே. வீரகத்திப்பிள்ளை அவர்களின் பிரியபத்தினி
வல்லிநாச்சியம்மையின் தேகவியோக
ஞாபகார்த்தமாகத் தொகுக்கப்பெற்றது.

திருநெல்வேலி டவுண்,
ஆனந்தா பிரஸில் அச்சிடப்பட்டது.
1933

7

திருச்சிற்றம்பலம்




# திருவருட்பாத் திரட்டும் உபதேச — மொழித் திரட்டும் —





ஸ்ரீரவையம்பதி வாசரும் உத்தம செல்வ வேளாண்குலத்
திகரும் ஆகிய காலஞ்சென்ற ஸ்ரீமாந்
வே. வீரகத்திப்பிள்ளை அவர்களின் பிரியபத்தினி
வல்லிநாச்சியம்மையின் தேகவியோக
ஞாபகார்த்தமாகத் தொகுக்கப்பெற்றது.

திருநெல்வேலி டவுண்,
ஆனந்தா பிரஸில் அச்சிடப்பட்டது.
1933

உ

திருச்சிற்றம்பலம்.



# பதிப்புரை.

---

திருக்கோணசலம் திருக்கேதீச்சரம், திருக்கதிர்காமம்முதலிய பாடல் பெற்றதலங்களைத்தன்னிடத் துள்ளதும் கடல்படுதிரவியம் மலைபடுதிரவியம்முதலாம் பல்வகைத்திரவியங்கள் மிகுந்ததுமாகிய ஈழமண்டலத்தினுத்திரதிசையில் நானுவித வளங்களாலுஞ் சிறந்தது யாழ்ப்பாணமாகும். இதன் கண்ணுள்ள கரவையம்பதியில் உத்தம சைவ வேளாண் குலத்தினரும், வேளாண்மையால்வந்த குற்றமற்ற திரவியத்தைக்கொண்டு சிறப்புற வாழ்தவருமாகிய ஸ்ரீ மத் க. சிற்றம்பலம் அவர்களும் அன்புக்குரிய மனைவிபத்தினிப்பிள்ளையுஞ் செய்ததவத்தின் மேம்பாட்டினுல் சேதுநிலையிட்ட மாப்பாணமுதலியார் கோத்திரம் விளங்கும்படி தோற்றியவரும் தண்ணளியடக்கம் முதலாஞ்சுகுணங்கள் கைவசம்பெற்றகாராளபூபதிஸ்ரீமத்வே வீரகத்திப்பிள்ளை அவர்களை மணந்து, ஸ்ரீ மாந் கணபதிப்பிள்ளை, ஸ்ரீ மாந் ஆறுமுகம், ஸ்ரீ மாந் கந்தையா. மாதுரத்தினங்களாகிய இலக்குமி பார்பதி ஆகிய இவர்களை யீன்றுவந்தவரும் சற்குணத்தின் மேம்பட்ட ஸ்ரீமான் ஆழ்வாப்பிள்ளை பார்ப்பதி ஆகிய மருமக்களாற் போற்றப்பட்டவருமாகிய ஸ்ரீமதி வல்லிநாச்சி யம்மையார் நிகழும் ஸ்ரீமுகவருஷம் புரட்டாதி மாதம் 11உ செவ்வாய்க்கிழமை சிவலோகஞ்சென்றின் புற்றமை உலகத்தோடொட்டிவாழும் எம்போலியர்கட்கு மிக்க துன்பஞ்செய்வதாயிற்று என்செய்வாம். இவர்கள் தேகவியோக ஞாபகார்த்த மாகப்பின் வரும்பாடல்களும் உபதேசமொழிகளும், யாவருமோதிப்பயன் படுமாறு தொகுக்கப்பெற்றது. இதைக்குறித்த பதிவிரதாசீலி ஸ்ரீமதி வல்லி நாச்சியம்மாள் சிவகதி யடைந்த திதிநிர்ணயத்தைக்காட்டும் கவியுமொன்று இப்புத்தகத்தினீற்றில் பாடிசேர்க்கப்பெற்றது. வழுக்கள் நேர்ந்திருக்கக்கூடு மென்றஞ்சு கின்றேன், வழுக்கற்றோரின் அவைகளைத் திருத்திப்படிக்கும்படியும் சிறியேனைமன்னிக்கும்படியும்வேண்டுகின்றேன்.



இங்ஙனம்,

கிளிநொச்சி அரசினர் பாடசாலை
3—10—33

வீ. வேலுப்பிள்ளை.
தலைமையாசிரியர்.

உ

திருச்சிற்றம்பலம்.

# திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்.

அருளிச்செய்தவை.



## திருப்பிரமபுரத்தேவாரம்.

பண்-நட்டபாடை.

தோடுடைய செவியன்விடை யேறியோர் தூவெண்மதிசூடிக
காடுடைய சுடலைப்பொடி பூசியெ னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடைய மலரான் முனைநாட்பணிந்தேத்த வருள்செய்த
பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மானிவனன்றே (1)

## திருவெங்குருத்தேவாரம்.

பண்-குறிஞ்சி.

காலைநன்மாமலர் கொண்டடிபரவிக் கைதொழுமாணியைக் கறுத்த வெங்காலன், ஓலமிடமுன் னுயிரொடுமாள வுதைத்தவனுமையவள் விருப்பனெம்பெருமான், யாலைவந்தணுக வோதம்வந்துலவி மறிதிரைசங்கொடு பவளமுனுந்தி, வேலைவந்தணையுஞ் சோலைகள்சூழ்ந்த வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே (2

## நமச்சிவாயத்திருப்பதிகப்பா.

இயமன் றூதரு மஞ்சுவ ரின்சொலால்
நயம்வந் தோதவல் லார்தமை நண்ணினால்
நியமந் தானினை வார்க்கினி யானெற்றி
நயன னும நமச்சி வாயவே (3)

## திருக்கழிப்பாலைத் திருத்தாண்டகம்.

விண்ணனாய்விண்ணவர்கள் விரும்பிவந்து
வேதத்தாய்கீதத்தாய்விரவியெங்கும்
எண்ணனாயெழுத்தானாய்கடலேழான
யிறையானாயெம்மிறையேயென் றுநிற்குங்
கண்ணனாய்காரானும்பாருமானாய்
கழிப்பாலையுள்ளுறையுங்கபாலப்பனார்
மண்ணனாய்மாயக்குரம்பைநீங்க
வழிவைத்தார்க்கவ்வழியேபோதுநாமே. (4)

## திருவானைக்காத் திருத்தாண்டகம்.

இம்மாயப்பிறப்பென்னுங்கடலாந்துன்பத்
    திடைச்சுழிப்படிளைப்பேனையிளையாவண்ணம்
கைம்மாளமனத்துரவிக்கருணைசெய்து
    காதலருளவைவைத்தாய்காணநில்லாய்
வெம்மானமதகரியினுரிவைபோர்த்த
    வேதியனேதென்னானைக்காவுண்மேய
அம்மானின்பொற்பாதமடைப்பெற்று
    லல்லகண்டங்கொண்டடியேனென்செய்கேனே. (5)

## திருநெய்த்தானத் திருத்தாண்டகம்.

பேசப்பொருளலாப்பிறவிதன்னைப்
    பெரிதென்றுன்சிறுமனத்தால்வேண்டியீண்டு
வாசக்குழன்மடவார்போகமென்னும்
    வலைப்பட்டுவீழாதேவருகநெஞ்சே
தூசக்கரியுரித்தான்றூநீறாடித்
    துதைந்திலங்குநூன்மார்பன்தொடரகில்லா
நீசக்கரியவனெய்த்தானமென்று
    நினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (6)

## திருக்கேதாரத் தேவாரம்.

பண்-நட்டபாடை.

வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய் செய்தபரிதான்
தாழாதறஞ் செய்மின் தடங் கண்ணான் மலரோனும்
கீழ்மேலுற நின்றான்றிருக் கேதார மென்னீரே. (7)

## திருப்பாண்டிக்கொடு முடித்தேவாரம்.

பண்-பழம்பஞ்சுரம்.

ஓதுநாளுணர்வழியுநாளுயிர்போகுநாளுயர்பாடைமேற்
காவுநாளிவையென்றலாற்கருதேன்கிளர்புனர்காவிரிப்
பாவுதண்புனல்வந்திழிபரஞ்சோதிபாண்டிக்கொடுமுடி
நாவலாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுவாநமச்சிவாயவே (8)

உ.

### மாணிக்கவாசகசுவாமிகள் திருவாசகம்.

### தில்லையிலருளிய

# திருப்பொற்சுண்ணம்.



## ஆனந்தமனோலயம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

முத்துநற்றாமம்பூமாமாலை தூக்கிமுளைக்குடந்தூபநற்றீபம்வைம்மின்
சத்தியுஞ்சோமியும்பார்மகளுநாமகளோடுபல்லாண்டிசைமின்
சித்தியுங்கௌவுரியும்பார்ப்பதியுங்கங்கையும்வந்துகவரிகொண்மி
னத்தனையாறனம்மானைப்பாடியாடப்பொற்சுண்ணமிடித்துநாமே (9)

பூவியல்வார்சடையெம்பிராற்குப்பொற்றிருச் சுண்ணமிடிக்கவேண்டு
மாவின்வடுவகிரன்னகண்ணீர்வம்மின்கள் வந்துடன்பாடுமின்கள்
கூவுமின்றொண்டர்பறநிலாமேகுனிமின்றொழுமினெங்கோனெங்கூத்தன்
றேவியுந்தானும்வந்தெம்மையாளச்செம்பொன்செய்சுண்ணமிடுத்துநாமே.

சுந்தரநீறணிந்துமெழுகித்தூயபொன்சிந்திநிதிபரப்பி
யிந்திரன்கற்பகநாட்டியெங்குமெழிற்சுடர்வைத்துக்கொடியெடுமி
னந்தரர்கோனயன்றன்பெருமானாழியானாதல்வேலன்றாதை
யெந்தரமாளுமையாள்கொழுநற்கேய்ந்தபொற்சுண்ணமிடித்துநாமே (11

காசணிமின்களுலக்கையெலாங்காம்பணிமின்கள்கறையுரலை
நேசமுடையவடியவர்கணின்றுநிலாவுகவென்றுவாழ்த்தித்
தேசமெல்லாம்புகழ்ந்தாடுங்கச்சித்திருவேகம்பன்செம்பொற்கோயில்பாடிப்
பாசவினையைப்பறித்துநின்றுபாப்பொற்சுண்ணமிடித்துநாமே. (12]

அறுகெடுப்பாரயனும்மரியுமன்றிமற்றிந்திரனோடமரர்
நறுமுறுதேவர்கணங்களெல்லாநம்மிற்பின்பல்லதெடுக்கவொட்டோஞ்
செறிவுடைமும்மதிலெய்தவில்லிதிருவேகம்பன்செய்பொற்கோயில்பாடி
முறுவற்செவ்வாயினீர்முக்கணப்பற்காடப்பொற்சுண்ணமிடித்துநாமே(13

உலக்கைபலவோச்சுவார்பெரியருலகமெலாமுரல்போதாதென்றே
கலக்கவடியவர்வந்துநின்றார்காணவுலகங்கள்போதாதென்றே
நலக்கவடியோமையாண்டுகொண்டுநாண்மலர்ப்பாதங்கள்சூடத்தந்த
மலைக்குமருகனைப்பாடிப்பாடிமகிழ்ந்துபொற்சுண்ணமிடித்துநாமே (14)

சூடகந்தோள்வளையார்ப்பவார்ப்பத்தொண்டர்குழாமெழுந்தார்ப்பவார்ப்ப
நாடவர்நந்தம்மையார்ப்பவார்ப்பநாமுமவர்தம்மையார்ப்பவார்ப்பப்
பாடகமெல்லடியார்க்குமங்கைபங்கினனெங்கள்பராபரனுக்
காடகமாமலையன்னகோவுக்காடப்பொற்சுண்ணமிடித்துநாமே. (15)

வாட்டடங்கண்மடமங்கை நல்லீர்வரிவளையார்ப்பவண் கொங்கைபொங்கத்
தோட்டிருமுண்டந்துதைந்திலங்கச்சோற்றெம்பிரானென்றுசொல்லிச்சொ
ல்லி, நாட்கொண்டநாண்மலர்ப்பாதங்காட்டிநாயிற்கடைப்பட்டநம்மையிம்
மை, ஆட்கொண்டவண்ணங்கள்பாடிப்பாடியாடப் பொற்சுண்ணமிடித்து
நாமே (16)

வையகமெல்லாமுரலதாகமாமேருவென்னுமுலக்கைநாட்டி
மெய்யெனுமஞ்சள்நிறையஅட்டிமேதகுதென்னன் பெருந் துறையான்
செய்யதிருவடிபாடிப்பாடிச்செம்பொன்னுலக்கைவலக்கைபற்றி
யையனணிதில்லைவாணனுக்கேயாடப்பொற்சுண்ணமிடித்துநாமே. (17)

முத்தணிகொங்கைகளாடவாடமொய்குழல்வண்டினமாடவாடச்
சித்தஞ்சிவனொடுமாடவாடச்செங்கயற்கண்பனியாடவாடப்
பித்தெம்பிரானொடுமாடவாடப்பிறவிபிறரொடுமாடவாட
வத்தன்கருணையொடாட வாடவாடப்பொற்சுண்ணமிடித்துநாமே. (18

மாடுநகைவாணிலாவெறிப்பவாய்திறந்தம்பவளந்துடிப்பப்
பாடுமினந்தம்மையாண்டவாறும்பணிகொண்டவண்ணமும்பாடிப்பாடித்
தேடுமினெம்பெருமானைத்தேடிச்சித்தங்களிப்பத்திகைத்துத்தேறி
யாடுமினம்பலத்தாடினானுக்காடப்பொற்சுண்ணமிடித்துநாமே. (19

மையமர்கண்டனைவானநாடர்மருந்தினைமாணிக்கக்கூத்தன்றன்னை, ஐய
யனையையர்பிரானைநம்மையகப்படுத்தாட்கொண்டருமைகாட்டும், பொய்
யர்தம்பொய்யனைமெய்யர்மெய்யைப் போதரிக்கண்ணிணைப்பொற்றொடித்
தோட் பையரவல்குன்மடந்தைநல்லீர்பாடிப்பொற்சுண்ணமிடித்துநாமே

மின்னிடைச்செந்துவர்வாய்க்கருங்கண்வெண்ணகைப்புண்ணமர்மென்
மொழியீ, ரென்னுடையாரமுதெங்களப்பனெம்பெருமானிமவான்மகட்கு
த், தன்னுடைக்கேள்வன்மகன்றகப்பன்றமையனெம்மையன்றாள்கள்பாடிப்
பொன்னுடைப்பூண்முலைமங்கைநல்லீர்பொற்சுண்ணமிடித்துநாமே

சங்கமரற்றச்சிலம்பொலிப்பத்தாழ்குழல்சூழ்தருமாலையாடச்
செங்கனிவாயிதழுந்துடிப்பச்சேயிழையீர்சிவலோகம்பாடிக்
கங்கையிரைப்பவராவிரைக்குங்கற்றைச்சடைமுடியான்கழற்கே
பொங்கியகாதலிற்கொங்கைபொங்கப்பொற்றிருச்சுண்ணமிடித்துநாமே.()

ஞானக்கரும்பின்றெளியைப்பாகைநாடற்கரியநலத்தைநந்தாத்
தேனைப்பழச்சுவையாயினானைச்சித்தம்புகுந்துதித்திக்கவல்ல
கோனைப்பிறப்பறுத்தாண்டுகொண்டகூத்தனைநாத்தழும்பேறவாழ்த்திப்
பானற்றடங்கண்மடந்தைநல்லீர்பாடிப் பொற்சுண்ணமிடித்துநாமே (23)

ஆவகைநாமும்வந்தன்பர்தம்மோடாட்செயும்வண்ணங்கள்பாடிவிண்மேற்
றேவர்கனவிலுங்கண்டறியாச்செம்மலர்பாதங்கள்காட்டுஞ்செல்வச்
சேவகமேந்தியவெல்கொடியான்சிவபெருமான்புரஞ்செற்றகொற்றச்
சேவகநாமங்கள்பாடிப்பாடிச்செம்பொன்செய்சுண்ணமிடித்துநாமே (24)

தேனகமாமலர்க்கொன்றைபாடிச்சிவபுரம்பாடித்திருச்சடைமேல்
வானகமாமதிப்பிள்ளைபாடிமால்விடைபாடிவலக்கையேந்து
மூனகமாமழுச்சூலம்பாடியும்பருமிம்பருமுய்யவன்று
போனகமாகநஞ்சுண்டல்பாடிப்பொற்றிருச்சுண்ணமிடித்துநாமே 25

அயன்றலைகொண்டுசென்றாடல்பாடியருக்கனெயிறுபறித்தல்பாடிக்
கயந்தனைக்கொன்றுரிபோர்த்தல்பாடிக்காலனைக்காலாலுதைத்தல்பாடி
யியைந்தனமுப்புரமெய்தல்பாடியேழையடியேமையாண்டுகொண்ட
நயந்தனைப்பாடிநின்றாடியாடிநாதற்குச்சுண்ணமிடித்துநாமே.

வட்டமலர்க்கொன்றைமாலைபாடிமத்தமும்பாடிமதியும்பாடிச்
சிட்டர்கள்வாழுந்தென்றில்லைபாடிச்சிற்றம்பலத்தெங்கள்செல்வம்பாடிக்
கட்டியமாசுணக்கச்சைபாடிக்கங்கணம்பாடிக்கவித்தகைம்மே
விட்டுநின்றாடுமரவம்பாடியீசற்குச்சுண்ணமிடித்துநாமே. 27

வேதமும்வேள்வியுமாயினார்க்குமெய்ம்மையும்பொய்ம்மையுமாயினார்க்குச்
சோதியுமாயிருளாயினார்க்குத்துன்பமுமாயின்பமாயினார்க்குப்
பாதியுமாய்முற்றுமாயினார்க்குப்பந்தமுமாய்வீடுமாயினாருக்
காதியுமந்தமுமாயினாருக்காடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

வினைப்பிறவி யென்கின்ற வேதனைபிலகப்பட்டுத்
தனைச்சிறிது நினையாதே தளர்வெய்திக் கிடப்பேனை
எனைப்பெரிது மாட்கொண்டென் பிறப்பறுத்த வினையிலியை
அனைத்துலகுந் தொழுந்தில்லை யம்பலத்தே கண்டேனே.

சேந்தனார் அருளிய

# திருவீழிமிழலைத் திருவிசைப்பா.

---

பண் பஞ்சமம்

உளங்கொள மதுரக் கதிர்விரித் துயிர்மே
லருள்சொரி தருமுமா பதியை
வளங்கிளர் நதியு மதியமுஞ்சூடி
மழவிடை மேல்வரு வானை
விளங்கொளி வீழி மிழலைவேந் தேயென்
றுந்தனைச் சேந்தன்று தையையான்
களங்கொள வழைத்தாற் பிழைக்குமோ வடியேன்
கைக்கொண்ட கனககற் பகமே

திருச்சிற்றம்பலம்

சேந்தனார் அருளிய

# திருப்பல்லாண்டு.

பண்-பஞ்சமம்.

தாதையைத்தாளறவீசியசண்டிக்குமண்டத்தொடுமுடனே
பூதலத்தோருப்வணங்கப்பொற்கோயிலும்போனகமுமருளிச்
சோதிமணிமுடித்தாமமுநாமமுந்தொண்டற்குநாயகமும்
பாதகத்துக்குப் பரிசுவைத்தானுக்கேபல்லாண்டு கூறுதுமே (30)

சேக்கிழார்சுவாமிகள்

## பெரியபுராணம்.

உலகெலா முணர்ந்தோதற் கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணிய
னலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம். (31)

அருணகிரிநாதர் அருளிய

## திருப்புகழ்.

இந்த வீடுங் கொஞ்சிய சிறுவரு முலைகேழும்
இசைந்த ஊரும் பெண்டிரு மினமையிம் வளமேவும்
விரிந்த நாடுங் குன்றமு நிலையென மகிழாதே
விளங்கு தீபங் கொண்டுனை யடிதொழ வருவாயே
குருந்தி லேறுங் கொண்டலின் மருகர் முருகோனே
சுரங்கு லாவுங் குன்றுறை குறமகள் மணவாளா
தெரிந்த வேதஞ் செந்தமிழ் தெரிதரு புலவோனே
சிவந்த காலுந் தண்டையு மழகிய பெருமானே. (32)

இறவாமற் பிறவாமல் எனையாள்சற் குருவாகிப்
பிறவாகித் திரமான பெருவாழ்வைத் தருவாயே
குறமாதைப் புணர்வோனே குகனேசொற் குமரேசா
கறையானைக் கிளையோனே கதிர்காமப் பெருமானே. 33

திருச்சிற்றம்பலம்.

உ

திருச்சிற்றம்பலம்.

## பட்டினத்தடிகள் திருப்பாக்கள்.

நல்லா ரிணக்கமு நின்பூசை நேசமு ஞானமுமே
யல்லாது வேறு நிலையுள் தோவகமும் பொருளு
மில்லாளுஞ் சுற்றமு மைந்தரு வாழ்வு மெழிலுடம்பு
மெல்லாம் வெளிமயக் கோயிறை வாகச்சி யேகம்பனே. (34)

ஊருஞ்சதமல்ல வுற்றார் சதமல்ல வுறுப்பெற்ற
பேருஞ் சதமல்லப் பெண்டீர் சதமல்லப் பிள்ளைகளுஞ்
சீருஞ் சதமல்லங் செல்வஞ் சதமல்லத் தேசத்திலே
ஆருஞ்சதமல்ல நின்றாள் சதங்கச்சி யேகம் னே (35)

காயும் பகைகொண்ட பெண்டீர் பெரும்பகை தன்னுடைய
சேயும் பகையுற வோரும் பகையிச் செகமும்பகை
ஆயும் பொழுதி லருஞ்செல்வ நீங்கிலின் காதலினாற்
தோயுநெஞ் சேமரு தீசற்பொற் பாதஞ் சுதந்திரமே (36)

வினைப்போக மேயொரு தேகங்கண்டாய்வினை தானொழிந்தாற்
தினைப்போ தளவுநில் லாதுகண்டாய் சிவன் பாதநினை
நினைப்போரை மேவு நினையாரை நீங்கி நெறியினின்றால்
உனைப்போ லொருவருண் டோமன மேயெனக் குற்றவரே (37)

மையாடு கண்ணியும் மைந்தரும் வாழ்வு மனையுஞ் செந்தீ
யையாநின் மாயையுருவெளித் தோற்ற மகிலத்துள்ளே
மெய்யாயிருந்தது நாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப் பழங்கதை யாய்க்கன வாய்மெல்லப் போனதுவே, ()

என்செயலாவது யாதொன் றுமில்லை யினித்தெய்வமே
யுன்செய லேயென் றுணரப்பெற் றேனிந்த வூனெடுத்த
பின்செய்த தீவினை யாதொன்று மில்லைப் பிறப்பதற்கு
முன்செய்த தீவினை யோவிங்ங னேவந்து மூண்டதுவே (39)

நாட்டமென் றேயிரு சற்குரு பாதத்தை நம்புபொம்மல்
ஆட்டமென் றேயிரு பொல்லா வுடலையடர்ந்தசந்தைக்
கூட்டமென் றேயிரு சுற்றத்தை வாழ்வைக் குடங்கவிழ்நீர்
ஓட்டமென் றேயிரு நெஞ்சே யுனக்குப தேசமிதே. (40)

அஞ்சக் கரமெனுங் கோடாலி கொண்டிந்த வைம்புலனும்
வஞ்சப்புலக்கட்டை வேரற வெட்டி வளங்கள்செய்து
விஞ்சத் திருத்திச் சதாசிவ மென்கிறவித்தையிட்டுப்
புன்செயக் களைபறித் தேன்வளர்த் தேன்சிவ போகத்தையே.(41)

## ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் உபதேசமொழிகள்

### ஆத்மஞானம்

1 ஐக்யபுத்தியைத்தருவது ஞானம்; பேதபுத்தியைத் தருவது அக்ஞானம் 2 பாம்பும் அதன்மேற்சட்டையும் வெவ்வேறானவை அதுபோல ஆத்மாவும் சரீரமும் வெவ்வேறானவை 3 ஸத்தை அடைவதற்கு சித்துக்குப்போ 4 லீலையின் மூலமாக நித்யத்தை அறியமுயல் 5 வினா - நான்எப்போது முக்தனாவேன்? விடை நான் என்பது இறந்தபின்பு.

### ஸாதனமார்க்கங்கள்

1 உலகத்தைப்பற்றிய எண்ணங்களும்கவலைகளும் உன்மனத்தைச் சஞ்சலப்படுத்தும்படி செய்துகொள்ளாதே. செய்ய வேண்டிய காரியங்கள் ஒவ்வொன்றையும் அதனதன்காலத்தில் செய். ஆயினும் உன்மனம் எப்போதும ஈசுவரனிடம் நிலைத்திருக்கட்டும்.

### ஈஸ்வர விசுவாஸம்

1 ஹிந்துக்களிடம் பலவிதமான பிரிவுகள்உள்ளனநாம் எந்தவகுப்பை அல்லது எந்த சம்பிரதாயத்தைப்பின்பற்றலாம்?

ஒருநாள் பார்வதிதேவி பரமேசுவரனை நோக்கி பிரபுவே சச்சிதானந்தத்தின் மூலம் எது? என்று கேட்டனள். அதற்கு மகாதேவர் விசுவாசம் தான் மூலம் என்று விடையளித்தார். ஆகலால் ஜாதி பேதங்களால் ஆவது ஒன்றுமில்லை ஒவ்வொருவனும் தனதுவகுப்புக்கு ஏற்பட்ட கடமையையும் பக்திமார்க்கத்தையும் சிரத்தையோடுசெய்யட்டும்.

2 கபடமில்லாதப் [illegible]மையோடும் கலப்பில்லாத சிரத்தையோடும் எவனொருவன் ஈஸ்வரசித்தத்துக்குத் தன்னை அர்ப்பணம் பண்ணுகிறானோ அவன் சீக்கிரத்தில் ஈஸ்வர சன்னிதானத்தையடைவான்

3 குருவின் சக்தியில் திடமான நம்பிக்கைகொண்ட சிஷ்யனொருவன் அந்தக்குருவின் பெயரைச்சொல்லிக்கொண்டிருந்த மாத்திரத்திலேயே ஒரு ஆற்றின்மீது நடந்துதாண்டிப்போனான். இதைக் கண்ட குரு என்பெயருக்கே இவ்வளவு மகிமைஇருக்கிறதா? எனது சக்திஇவ்வளவு அபாரமென்பதை நான் இதுவரையில் தெரிந்து

கொள்ளவில்லையே என்று நினைத்தார். மறுநாள் குருபானவர் நான் நான் நான் என்று சொல்லிக்கொண்டு ஆற்றின்மீது நடக்கப்பார்த்தார் ஆனால் தண்ணீரில் கால்வைத்தவுடன் அமிழ்ந்து மூழ்கிப்போய்விட்டார் அவருக்கு நீந்தத்தெரியாதாகையால் இறந்துபோனார் சிரத்தையால் அபூர்வமான செய்கைகளைசாதிக்கலாம் ஆனால் தற்புகழ்ச்சியோ மரணத்தைத்தான் தரும்.

4 விசுவாசமுள்ளவனுக்கு எல்லாம் உண்டாகும் அது இல்லாதவனுக்கு எல்லாம்போய்விடும்.

5 ஸ்ரீராமபிரான் இலங்கைக்குப்போய் சேருவதற்கு முன்னால் சமுத்ரத்தில் அணைபோடவேண்டியிருந்தது ஆனால் அவருடைய பரம பக்தனான ஹனுமான் ராமபிரானிடம் வைத்திருந்த திடபக்தியினால் சமுத்திரத்தை ஒரே தாண்டலாய்த்தாண்டிவிட்டார் இங்கு எஜமானனைக்காட்டிலும் ஸேவகனே அதிகமான காரியத்தை சாதித்தான். காரணம் பக்தி.

## ஸாதன பரிசிரமம்

1 பதியே தெய்வமாகக்கொண்ட கற்புடைய ஸ்திரீ ஒருத்தி இறந்தபின்கூட தன் கணவனுடன் ஸ்வர்க்க லோகம் உடனுறைவதைப்போல் தனது இஷ்டதேவதையே முற்றிலும் நம்பியிருப்பவன் நிச்சயமாக ஈசுவரனுடன் ஐக்கியமாவான்.

## ஸாதற விக்றம்.

அதைரியம், த்வேஷம், பயம் இவைகள் குடிகொண்டிருக்குமிடத்துக்கு ஈசுவரர் வருவதில்லை. (1)
ஒருவாலிபச்சிஷ்யனைக்குறிப்பிட்டு, பகவான் சொன்னதாவது — அவற்முகத்தில் செட்டமாறுதல் ஒன்றுதோன்றுகிறது, அதன்மீது ஏதோகருப்பான ஒருவஸ்து படர்ந்திருப்பது போன்றுற்றது இதெல்லாம் கச்சேரிவேலையால் நேர்ந்தகாரியம், கணக்குகளும் இன்னும் வேறுபலவிஷயங்களும் கவனிக்கப்படவேண்டுமல்லவ ()

பணம் எவனுக்கு அடிமையோ அவன்தான் வாஸ்தவமானமனிதன் பணத்தை எப்படி உபயோகிக்கிறதென்பதைத் தெரிந்துகொள்ளாதவர்கள் மனிதர்கள் என்றபேருக்கு அருகரல்லர் (3)

அகங்காரம்.

மனிதனிக்கு எப்போது முக்தியுண்டாகும்? அவனுடைய அகங்காரம் அழியும்போதுதான் (1)

தாயே! நான்ஒருயந்திரம், நீயந்திரி; நான்ஒருஅறை, நீ அதில் குடியிருப்பவன், நான்உறை, நீயதில் போடப்படும் கத்திநான்ரதம் நீசாரதி, நீஎதைச்செய்ய சொல்கிறாயோ அதையேதான் செய்கிறேன் நீஎதைசொல்லச்சொல்கிறாயோ அதைத்தான் நான் சொல்கிறேன் நீஎன்னைஎப்படி நடக்கவேண்டு மென்கிறாயோ அப்படியேநான் நடந்தொழுகுகிறேன் நான்அல்லேன், எல்லாம் நீதான். (2)

கர்வியாக இருப்பதுகேவலம் தாழ்ந்தசுபாவம் காக்கையைப்பார் தான்சாமர்த்தியமுள்ள பக்ஷியென அது நினைத்துக்கொண்டிருக்கிறது ஒருபோதும் அதுவலையில் அகப்படுவதில்லை ஆபத்துவருமென்பதைச் சற்று தெரிந்துகொண்டதும் பறந்தோடிவிடுகிறது வெகுதந்திரமாக ஆகாரத்தை திருடுகிறது என்றாலும் மலம்தின்பதில் மட்டும் அதற்கு அருவெருப்பில்லை அதிகச்சமர்தாக இருப்பதின்பலன் இதுதான் (3)

ஈஸ்வரன் இரண்டுசமயங்களில் மந்தஹாஸம் செய்கின்றனன்:— முதலாவது, ஒருவன் கொடும்வியாதியால் அவஸ்த்தைப்பட்டு மரணத்தருவாயிலிருக்கும்போது வயித்தியன உள்ளேவந்து நோயாளியின் தாயைப்பார்த்து பயப்படவேண்டாம் உன்மகனுடைய உயிரைக்காப்பாற்ற நான் இருக்கிறேன் என்றுசொல்லும்போது இரண்டாவது இரண்டு சகோதரர்கள் தங்களுடைய நிலத்தைப் பங்கிட்டுக்கொள்ள அளவுகோலை கையிலெடுத்துக்கொண்டு கோடு கிழித்து அந்தப்பக்கம் உன்னுடையது இந்தப்பக்கம் என்னுடையது என்றுசொல்லும்போது. (4)

5 இனிப்புத்தின்பண்டங்களுக்கிருக்கும் கெட்டகுணம் கற்கண்டுக்கு இல்லை அதுபோல தாஸாபிமானம் பக்தாபிமானம் இருப்பதில் தீங்கொன்றுமில்லை அவை ஒருவனை ஈசுவர சமீபத்தில் கொண்டு சேர்க்கும் இதுதான பக்தியோகமெனப்படும்.

## பக்தி

காரணமின்றியும் ஈசுவரனிடம் பக்தி கொள்வதென்பதொன்றுண்டு இந்தநிலையை அடைந்துவிட்டால், அப்பால் விரும்பிப்பெறக்கூடிய பொருள் ஒன்றுமே இராது அப்படிப்பட்ட பக்தியையுடையவன் 'ஈசுவரனே' எனக்குசெல்வம்வேண்டாம், புகழ்வேண்டாம், ஆரோக்கியம்வேண்டாம். சந்தோஷம் முதலிய மற்றெதுவும்வேண்டாம் உனதுபாதாரவிந்தங்களில் கலப்பற்ற பக்திமட்டும் இருக்கும்படி கிருபைபுரியவேண்டும் என்பான் (1)

## முக்தி

ஏன் உன் ஆயுட்காலம் எல்லாம் பாபநாசங்களைப்பற்றி பேசிகொண்டிருக்கிறாய்? அவைகளைவிட்டுவிட்டு பகவந்நாமம் ஸங்கீர்த்தனம் பண்ணு, 'ஈசுவரா' செய்யக்கூடாத காரியங்களைநான் செய்துள்ளேன்; செய்யவேண்டிய காரியங்களைச்செய்யாமல் விட்டுவிட்டேன் ஸ்வாமி, என்னை க்ஷமித்தருளவேண்டும்'' என்று ஒருதரம் சொல்லு சொல்வதுடன் நிற்காமல்அவனிடம் பூர்ண நம்பிக்கைகொண்டவனயிரு அப்போது உன்பாபங்களெல்லாம் அகன்றுபோம் (1)

## கிரஹஸ்தர்களுக்கு உபதேசம்

1. குழந்தைகள், தனித்து, மரப்பாவைகளை வைத்துக்கொண்டு மனம்போனபடியெல்லாம் விளையாடும்போது தாயை நினைப்பதில்லை. ஆனல் அவ்விடத்துக்கு தாய் வந்துவிட்டால், குழந்தைகள் மரப்பாவைகளை அப்பால் போட்டுவிட்டு 'அம்மா அம்மா' என்று கூவிக்கொண்டு அவளிடம் ஓடும் அக்குழந்தைகளைபோல்தான் நீங்களும் யிருக்கிறீர்கள். இவ்வுலகத்தில் செல்வம் கௌரவம் கீர்த்தி முதலிய மரப்பாவைகளில் கருத்தான்றியவராய் வேறொன்றையும் கவனிக்காமல் விளையாடுகிறீர்கள் ஆனல் ஒருதரம் உங்களிடத்திலேயே திவ்யமாதாவை தரிசனம் செய்தீர்களேயானல் செல்வம் கௌரவம் புகழாதிகளில் உங்களுக்கப்பால் ஒருபோதும் இச்சையுண்டாகாது. அவைகளையெல்லாம் திரஸ்காரம் செய்துவிட்டு நீங்கள் அவளிடம் ஓடுவீர்கள்.

## தர்மஸமற்வயம்

வாக்குவாதம் செய்யாதே, உனது தர்மத்திலும் அபிப்பிராயத்திலும் உனக்கு எவ்வளவு மனவுறுதி இருக்கிறதோ அப்படியே மற்றவர்களுடைய தர்மங்களிலும் அபிப்பிராயங்களிலும் அவரவர்களுக்கு மனவுறுதி

இருக்கும்படி விட்டுவிடு. வாக்குவாதத்தினால்மட்டும் மற்றொருவனுடைய பிழையை அவனுக்கு எடுத்துக்காட்ட முடியாது. ஈசுவரனுடைய கிருபைவருமானால் ஒவ்வொருவனும் தன் தன்னுடைய பிழைகளைத் தெரிந்து கொள்வான்.

## யுகதர்மம்

மனிதன் தயை விஷயத்தில் கிறிஸ்தவனாகவும் ஆசார அநுஷ்டானங்களில் முஹம்மதியனைப்போலவம் ஸர்வ ஜீவனிடத்தும் பாராட்டும் அன்பு விஷயத்தில் ஹிந்துவாகவும் இருககட்டும்.

## நானாவகை

1. பிறர் எதைச்செய்யவேண்டுமென்று நீ விரும்புகிறாயோ அதை நீயே செய.

2, பண்டிகைக் காலங்களில் ஜனங்களுக்கு ஏன் சாப்பாடு போடுகிறார்கள்? சர்வ ஜீவனிடத்தும் அந்தர்யாமியாய் விளங்குகிற ஈஸ்பரனுக்கு நிவேதனம் செய்வதும் மேறகூறியபடி அன்னமிடுவதும் ஒன்றென்றேயுனக்குத் தோன்றவில்லையா? ஆனால் கெட்ட நடிபடிக்கையுள்ளவர்களையும் காமுகர்களையும் அப்படிப்பட்ட பண்டிகை காலங்களில் சாப்பாட்டுக்கு அழைக்ககூடாது. அவர்களுடைய பாபமானது அவர்கள் உட்கார்ந்திருக்கும் ஆசனத்திற்குக்கீழே அநேக முழம் ஆழம் வரையில் மண்ணை அசுத்தமாக்கும் கொடிய சுபாவமுள்ளதாம்.

3. ஒரு மனிதன் அநேகம் குழந்தைகளைப் பெற்று வளர்ப்பானானால் அதற்காக மட்டும் அவனைச் சிலாகிப்பதில் குணமில்லை. அதில் உண்மையான புருஷத்வம் இருப்பதாகத் தெரியவில்லை. ஏனெனில் நாய்களும் பூனைகளும்கூட அவ்வாறே குட்டிபோட்டு வளர்க்கின்றன. தனக்கு ஏற்பட்ட தர்மத்தைச் செய்வதற்கு புருஷத்வம், அப்படிப்பட்ட புருஷத்வம் அர்ஜுனனிடத்தில் வெளியாயிற்று.

4. ஒரு சிஷ்யன்:- ஸ்திரீகளை நாம் எவ்விதம் பாராட்டவேண்டும்?

பரமஹம்சர்:— உண்மையை அறிந்தவனும் ஈஸ்பரதரிசனம் பெற்றவனும் ஸ்திரீகளை கண்டு பயப்படுவதில்லை. அந்த ஸ்திரீகள் ஜகதீஸ்வரியான திவ்ய மாதாவின் அம்சங்களே யாவரென்பதை அவன் காண்கிறான். ஆதலால் அவன் அவர்களை மரியாதையுடன் கௌரவப்படுத்துவதுமட்டுமின்றி தாய்க்கு மகன் செய்வதைப்போல அவர்களுக்கு வந்தனைவழிபாடுகளும் செய்வான்.

5. நற்குணங்களுடன் பிறந்தாலும் பிறக்காவிட்டாலும் கற்புடையவராகவோ விபசாரிகளாகவோ இருந்தாலும் ஸ்திரீகள் அனைவரும் ஆனந்தமாதாவின் ரூபபேதங்களென்று கருதப்பட வேண்டும்.

6. வியாதி பீடிக்கட்டும். ஆனால் மனமே! நீ மட்டும் எப்போதும் ஆனந்தத்திலிரு

7. ஆத்மா ஒன்றனேனும் பந்தப்பட்டிருப்பதில்லை யென்று வேதாந்திகள் கூறுகின்றனர் பாபபுண்ணிய சுகதுக்கம் முதலியன அதை ஒருபோதும் கட்டுப்படுத்துவதில்லை. ஆனால் அவைகள் சரீரத்தின்மீதுபற்று வைத்தவர்களைத் துன்பத்துக்குள்ளாக்கும். புகையானது சுவற்றைக் கரியாக்கும ஆகாசத்தை ஒன்றுஞ்செய்யாது.

8. மனிதனுக்குத் தாய் தந்தையர் வெகு முக்கியம் அவர்களைத் திருப்திப்படுத்தினாலொழிய ஸாதன மார்க்கங்கள் பயனைத்தரமாட்டாது. ஆதலால்தான் ஈஸ்பரப் ரேமையால் பித்தேறிய சைதன்னிய ஸ்வாமிகூட நாம் ஸந்யாசம் பெற்றுக்கொள்வதற்கு முன்னால் தமது தாயைச் சமாதானப்படுத்துவதற்கு வெகு சிரமப்பட்டனர். "தாயே! வருந்த வேண்டாம் நான் அடிக்கடி உன்னைப் பார்க்வருவேன் என்று அவர் போயினர். தேவர்களின் கடன ரிஷிகளின் கடன் பெற்றோர்களின் கடன் முதலியபல கடன்களை மனிதன் கொடுக்கவேண்டியிருக்கிறது பெற்றோர்களின் கடனைக் கொடுத்தாலொழிய சற்கருமங்கள் பலககமாட்டா, மனைவிக்குக் கொடுத்துத்தீரவேண்டிய கடனென்றுண்டு.

9: தியானமும் சிந்தனையும் சதா காலமும் செய்ய வேண்டும்.

10 உலகவாழ்க்கையில் பணத்தின்உதவி அவசியந்தான் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அதையேபற்றி வெகுவாக சிந்தித்துக்கொண்டிராதே தானே கிடைக்கக்கூடியதைக்கொண்டு திருப்தியடைவதேமேலான குணம். பணத்தைச் சேர்த்துவைக்கவேணுமென்று கவலைகொள்ளாதே. ஈஸ்வரனுக்குத் தங்களுடைய ஆவியுடல்களை அர்ப்பணம் பண்ணி அவன் தான் தஞ்சமென்று சரணமடைந்த பக்தர்கள் இப்படிப்பட்ட பணவிஷயங்களைப்பற்றிக் கவனிக்கிறதில்லை. அவர்களுடைய வரவுக்குத்தக்க செலவு இருக்கும் ஒரு வழியிலிருந்துவரும் பணம் இன்னொருவழியாய் செலவழிந்துபோம்

———

# ஆத்மஞானம்.

ஓம்

ஸ்ரீ ராம கிருஷ்ணய நம

சுவாமி வேகானந்தாய நம.

## ஞானமொழிக் கோர்வை.

பாதரசம்தடவினகண்ணாடியில் ஒருவனுடையமுகம் பிரதிபலிக்கும். அதுபோல், சக்தியையும் தூய்மையையும் பிரம்மசாரியத்தால் காப்பாறிக்கொண்டிருக்கிறவனுடைய இருதயத்தில் சர்வேசுரனுடைய திவ்யரூபம் பிரதிபலிக்கும். (1)

ஸ்ரீ ராமகிருஷ்ண உபதேச மொழிகள்

நமக்கு நாமேநண்பன்; நமக்குநாமேபகைவன் என்ற சிறந்தஞானத்தை அறிந்தவர்க்கு ஆத்மதத்துவ மதமேயல்லாது மற்றவழிபாடு வேண்டாம் (ஆத்ம சக்தி) (2)

கர்வமின்மை; டம்பமின்மை; ஹிம்சைசெய்யாமை பொறுமை; நேர்மை ஆசாரியனைவழிபடுதல்; தூய்மை; ஸ்திரத்தன்மை; தன்னைக் கட்டுதல் இந்திரியவிஷயங்களில்விருப்பமின்மை; அஹங்காரமில்லாமை, பிறப்பு. இறப்பு, நரை, நோய், துக்கம், தோஷம், இவற்றின் கண்சிவந்தகாட்சியுடைமை, பற்றின்மை; மகனையும் மனைவியையும் வீட்டையும் தன்னுடமை, யெனக்கருதாமை; விரும்பியனவும் விரும்பாதனவும், எய்துமிடத்தே சமசித்தமுடமை பிறழ்ச்சியற்ற யோகத்துடன் என்னிடம் தவறுதலின்றிச் செலுத்தப்படும் பக்தி. தனியிடங்களைமேவுதல்; சனக்கூட்டத்தில் விருப்பமின்மை ஆத்மஞானத்தில் எப்போதும் நழுவாமை; தத்வ ஞானத்தில் பொருளுணர்வும்;— இவைஞானமெனப்படும், இவற்றினின்றும் வேறுபட்டது அஞ்ஞானம் (பகவத்கீதை) [3]

ஈசுவரன்

எல்லா மனிதர்களிடத்திலும் ஈசுவரன் இருக்கிறான், ஆனால் ஈசுவரனிடத்தில் எல்லா மனிதர்களுமில்லை இதுதான் அவர்கள் துன்பப்படுவதற்குக் காரணம் (உபதேசமொழிகள்)

உயிர்களனைத்தின் உள்ளேநிற்கும்
ஆத்மாநான் அவ்வுயிர்களின் ஆதிநான்
இடையும் அவற்றின் இறுதியும் யானே. (கீதை)

ஒருநாடகத்தில் ஒரேமனிதன் ஒன்றன்பின் ஒன்ருய்ப்பல்வேறு வேடங்களைப்போட்டுக் கொள்வதைப்போல், உலகத்தில் ஈசுவரனும் வேறுவேறு உருவங்களைத்தரிக்கின்றனன் ஒரேவேடத்தை வேறுவேறு மனிதர்கள் போட்டுக்கொள்ளக் கூடியதைப்போல வேறுவேறு ஜீவப்பிராணிகளும் மனித பதத்தை அடைந்திருக்கின்றன. அவையெல்லாம் பார்வைக்கு மனிதர்களாகக் காணப்பட்டாலும். சிலகிழித்தெறியும் ஓநாய்களாகவும் சிலகுரூரமான கரடிகளாகவும், சிலதந்திரமுள்ள நரிகளாகவும், இன்னும் சிலவிஷப்பாம்புகளாகவும் இருக்கின்றன.

உபதேசமொழிகள்

(ஈசுவரனும் சீவனும்)

ஈசுவரன் ஒருவனே வாஸ்தவமானவன் சீவனும் உலகமுமான அவன்தோற்றங்கள் வாஸ்தவமானவன் அல்ல, அதாவது நிர்மல பந்தப்பட்ட சீவன் மனுஷ்யனுதும் மாயையாகிய சங்கிலியினின்றும் விடுபட்டஜீவன் ஈசுவரனுதும் நீரும் நீர்க்குமிழியும் ஒன்ருயாம் அக்குமிழி, நீரிலேயேமிதந்து, கடைசில் நீரோடேயே இரண்டறக கலந்து போகின்றது அதுபோல ஜீவாத்மா பரமாத்மா என்றஇரண்டும் ஒன்றேயாம் அளவுமாத்திரத்தால்த்தான் அவைகளுக்குள் வித்தியாசம் எற்படுகின்றது; ஒன்றுக்கு அளவுண்டு; மற்ருென்று அளவற்றது ஒன்றுபிறபொருள் மீதுசார்ந்துள்ளது; மற்ருென்று சுயேச்சையையுடையது

(உபதேசமொழிகள்)

(ஈசுவரனும் பக்தர்களும்)

சூரியவெளிச்சம் எங்கேவந்தாலும் ஒன்றேதான் ஆனல் தண்ணீர் கண்ணுடி. மெழுகிட்டஉலோகம் இவைபோன்ற வஸ்துக்களால் அவ்வெளிச்சம் நன்ருகப் பிரதிபலிக்கின்றது, அதுபோலத்தான் தெய்வீக ஒளியும் அது எல்லாரிடத்தும் சமமாயும் பாரபக்ஷமின்றியும் வருகின்றது என்ருலும் நல்லாருடைய தூய் மனமும், சாதுக்களுடைய இருதயமுமே அவ்வொழியை நன்ருய்ப் பிரதிபலிக்கச் செய்கின்றன

(உபதேசமொழிகள்)

பயத்திலோ நிர்ப்பந்தத்தினலோ, செய்யப்படும் காரியமானது மார்க்க காரியமாகிற தில்லை?

சத்தியத்தையும், தர்மத்தையும்விடப் பெரிய மதம் எதுவுமில்லை பகவானுடைய திருநாமத்தைச் சொல்லிக்கொண்டே நாம் பாவத்தைச் செய்வோமாயின், அவருடைய கிருபைக்குப் பாத்திரராக முடியுமா? ஒருவன் பகவானிருப்பதாக ஒப்புக்கொண்டு பொய்யும் துன்மார்க்கமும் நிறைந்த வாழ்வை வாழ்கின்றான், மற்றொருவன் அவருடைய பெயரைக்கூடக் கேட்டவனல்லவாயினும், சத்தியமும் சன் மார்க்கமும் நிறைந்த வாழ்வை வாழ்கிறான் என்று வைத்துக்கொள்வோம். இவ்விருவரில் எவன் மதப் பற்றும் சன்மார்க்கமும் நிறைந்தவனென்பதில் சந்தேகமுண்டோ? ஈசுவரனுக்கு வாசகினால் மாத்திரம் கைங்கரியம் செய்கிறவன் நாத்திகனிலும் கேடானவன் மற்றவன் ஈசுவரனுடைய கட்டளைகளின்படி நடக்கிறவனாகையால், அவனைப் பரமபக்தனாகக் கருதப்படவேண்டும். ஆகையால் மதமென்பது சன்மார்க்கமென்பதும் ஒன்றுதான். (நீதிதர்மம்)

மறைவிடத்தில் இருந்துகொண்டு, தனியனாய் உள்ளத்தைக்கட்டி ஆசையைத் துறந்து, ஏற்பது நீக்கி, எப்போதும் ஆத்மாவில் யோகமுறக் கடவாய். (பகவத் கீதை 6: 10)

ஒரே வஸ்துவான தண்ணீரை, சிலர் ஜலம் என்றும், சிலர் வாரியென்றும், சிலர் அக்வா என்றும், சிலர் பாணியென்றும், வேறு வேறு வார்த்தைகளால் கூறுகின்றனர். அதுபோல ஒரே சச்சிதானந்தஸ்வரூபியை சிலர் கடவுளென்றும், சிலர் அல்லாவென்றும்; சிலர் ஹரியென்றும் சிலர் பிரமம் என்றும் அழைக்கின்றனர். (உ. மொழிகள்)

எச்சமயம் எல்லாச்சமயங்களையும்சகோதர சமயங்களாகத் தழுவுகிறதோ அது சமரச நோக்குடைய சன்மார்க்க சமயமென்று போற்றப்படும் எச்சமயம் பிறசமயங்களைப் பொய்யெனக் கருதுகிறதோ பழிக்கிறதோ அது சமரச சன்மார்க்கத்தை வளர்ப்பதாகாது. சமரச நோக்குடைய சமயமெதுவோ அது ஜாதிமத தேச பாஷை வேற்றுமை பாராட்டாது எல்லா உயிர்களிடத்தும் ஒரேவித அன்பு செலுத்துமாறு மக்களை ஏவும் அச்சமயம் கைம்மாறு கருதப் பணியாற்றுமாறு போதிக்கும் தனக்கெனவாழாது பிறர்கென வாழுமாறு அறிவுறுத்தும், தியாக உணர்வு நல்கும், உயர்வு தாழ்வை யொதுக்கும்; இன்னோரென்ன விழுமிய நோக்கங்களையுடைய சமயமெதுவோ அதுவே சமயம்.

(சைவத்தின் சமரசம்)

## அஹிம்சை (பொல்லாமை.)

எல்லா தர்மத்தைக்காட்டிலும் அஹிம்சா தர்மம் மேலானது. எந்த மனிதன் மற்றப் பிராணிகளைத் தன்னைப்போல் நினைத்துத் தண்டிப்பதையும் கோபத்தை விட்டிருக்கிறானோ அவன் இம்மையிலும் மறுமையிலும் சுகத்தோடு விளங்குவான். செயலதினாலும், சொல்வதினாலும் நினைப்பதினாலும் மனிதனைப் பாவம் பற்றுகிறது. முதலில் மனத்தினாலும், பிறகு வாக்கினாலும், அதன்பின் செய்கையினாலும் வரும் ஹிம்சையை விட வேண்டும், இதனாற்றான் ஆன்ம சக்தியும் ஆன்மத்வமும் உண்டாகும்

(ஆத்ம சக்தி)

சைவர்களே! உங்கள் சமயம் யாது? நீரில் மூழ்குவதா? துணி தோய்ப்பதா? நீறிடுவதா? அநுட்டானஞ் செய்வதா? கோயில்வலம் வருவதா? அன்று அன்று இவையாவும் புறவொழுக்கங்களாகும். ஜீவகாருண்யநெறியே உங்கள் உள்நெறி. அஃதில் உலயேல் குளித்தலும் பூசலும் விறவும் என்னும்? நீங்கள் உங்கள் அருட்டொண்டை ஆற்றியிருப்பின் உலகில் உயிர்கொலை நேருமோ? புலைபுசிப்பு நிகழுமோ! உயிர்கொலையும புலைபுசிப்பும் மடங்களையுநதிண்டுமளவு பரவியிருப்பதைக் கவனிக்கிறீர்களா? சைவ உலகின் கவலையின் கண்ணே என்னே?

சைவத்தின் சமரசம்

சிவத்தொண்டு நாடுவோர் அவர் மகவுகாண
உயிர்த்தொண்டு புரியவேண்டும் [விவேகானந்தசுவாமிகள்]

கடவுள் தொண்டே என்கொள்கை ஆதலின் அது உயிர்கள் தொண்டாகிறது. [மகாத்மாகாந்தி]

கொடுத்தால் கடன் என்று கருதிக் கைம்மாறு வேண்டாமல் தகுந்த இடத்தையும் காலத்தையும் பாத்திரத்தையும் நோக்கிச் செய்யப்படும் தானத்தையே சாத்வீகமென்பர். [கீதை]

சிவநேயர்களே! எவரையும் சிவமாகவழிபடுங்கள்? எச்சமயத்தையும் சிவசமயமாகக் கொள்ளுங்கள். எக்கடவுளரையும் சிவமாகக் கொளுங்கள் உலகிலுள்ள ஆடுமாடுகள் அம்மா அம்மா வென்று கதறிக்கதறி உங்களையழைக்கின்றன அருளுலகம் உங்களையழைக் செவிசாயுங்கள்? அன்புளங்கொண்டுஎழுங்கள்? அருள்முகங்கொண்டு எழுஙகள்? தொண்டாற்ற? புறப்படுங்கள் வித்தகம்பேசவேண்டாம் பணிசெய்யப்புறப்படுங்கள் உங்கள் அருகணறி உலகெலாம் பரவமோவதுண்மை மேல்நாடும் கீழ்நாடும் ஒன்றுபட்டு ஈன

போகும் உலகு உங்கள் அருணெறியையே தழுவும் அந்நெறியே அவ்வுலகிற் கிரியநெறியாகும் ஆதலால் அந்நெறிவளர்க்க எழுங்கள்! எழுங்கள்! வடமொழி தென்மொழி சண்டை வேண்டாம் எவ்வுயிரையும்சிவமாகக் கொண்டெழுங்கள் எல்லா நலன்களும் உண்டாகும்

(சைவத்தின் சமரசம்)

சீரார் சீநீமுகத்திற் சேர்கன்னி மாமதிமுற்
போாரு மட்டமியே பேசுகுசன் — நேராரும
மாதுவல்லி நாச்சிப்பிள்ளைப்பெயராள் மன்கயிலை
நாதனடிப் போதடைந்த நாள்,

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

அனைத்துயிர் ஒன்றென்றெண்ணி
அரும்பசி யெவர்க்கு மாற்றி
மனத்துளே பேதாபேதம் வஞ்சம்
பொய்களவு சூதுசினத்தையும்
தவிர்ப்பாயாகில், செய்தவம் வேறொன்றுண்டோ
உனக்கிது உறுதியான உபதேசம் ஆகுந்தானே

---

திருச்சிற்றம்பலம்.



